[16th March 1961

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அங்கத்தினரை மாத்திரம் கவனிப்பதற்காகக் கேட்கப்படவில்லை. ஏழை மக்கள் கவனிக்கப்படவேண்டும் என்பதுதான் நோக்கம். ஆகவே, அங்கே கண் ஆஸ்பத்திரி இருக்கிறதே. அதில் பணம் கொடுத்தால்தான் சேர்ப்பார்கள் என்பதும்.......

MR. SPEAKER : தயவுசெய்து மிஷன் ஆஸ்பத்திரியைப் பற்றிக் கேள்வி கேளுங்கள் ?

SRI V. K. KOTHANDARAMAN : அந்த ஆஸ்பத்திரியில் ஐ டாக்டரோ அல்லது வெனிரியல் டிஸீஸ் டாக்டரோ கிடையாது. ஒரு ஆனரரி டாக்டர்தான் இருக்கிறார் என்ற காரணத்தால், மிஷன் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அங்கே பர்மனெண்டாக ஒரு ஐ டாக்டரையும் வெனிரியல் டிஸீஸ் டாக்டரையும் உடனடியாக நியமிக்க முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வெனிரியல் டிஸீஸ் டாக்டர் அங்கே இருக்கிறார். ஏழைகளுக்கு என்று கேட்க ஆரம்பித்து, தனக்கு இல்லை என்கிறார் அங்கத்தினர். அவர்கள் பணக்காரர்களோ என்னவோ ; அப்படியானால் அவர்கள் எப்பொழுது பணக்காரர் ஆனார், எப்படி ஆனார் என்று தெரியவில்லை. (சிரிப்பு).

*Removal of Sand heaps (Kanyakumari district)*

MR. SPEAKER : As the hon. Member Sri T. S. Ramaswamy, who gave notice of question No. 887 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*887 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken by the Government to remove the sand-dune heaped in the villages of Puthenthurai and Kovalam in the Kanyakumari district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : At Puthenthurai, a major portion of the sand heap has already been cleared by the Public Works Department by utilizing a bulldozer. The Public Works Department has also been allotted sufficient funds to clear the sand heaps at Kovalam by using a bulldozer. In addition to removal of the sand heaps, steps have been taken to raise wind-belts, i.e., belts of trees and shrubs which will bind the sand and reduce the speed of the wind and thus prevent the formation of sand heaps.

*President's awards to teachers*

*888 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் எத்தனை ஆரம்ப உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு என்னென்ன திறமைகளுக்காக ராஷ்டிரபதி விருதுகள் இவ்வாண்டு வழங்கப்பட்டன ?

16th March 1961]

(இ) இந்தப் பரிசுக்கு உரியவர்களை எந்த அடிப்படையில் யார் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்?

(உ) ஆதாரக் கல்விப் பள்ளி ஆசிரியர்கள் இத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றனரா?

(எ) இல்லையானால், அவர்களுக்கும் இதில் இடம் அளிக்கப் படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : In recognition of their service to the cause of Education, a Secondary school teacher and three Elementary school teachers of this State have been awarded National Awards for teachers for the year 1960–61.

The teachers applying for the award are first screened by a District Committee of which the District Educational Officer is the Chairman. The District Committees forward their recommendations to the State Committee of which the Director of Public Instruction is the Chairman. This Committee draws up a list of three teachers in the order of preference for each of the awards in Secondary School Education and Elementary School Education and forwards it to the State Government. The State Government forward these names together with their recommendations to the Government of India who finally select the candidates for the award. The selection is thus made on the recommendation of the State Committee which is based on the record of service and standing of the individual teacher.

SRI A. VEDARATHNAM : இந்தப் பரிசு பெற்றவர்கள் பெயர்களை அறிவிக்க முடியுமா? தனி நபர்களுக்கு பரிசு கொடுப்பதைக் காட்டிலும், மாகாணத்திலேயே நன்றாக நடக்கும் பள்ளிகளுக்கு என்று கொடுத்தால், ஆசிரியர்கள் எல்லோரும் சேர்ந்து சிறந்த முறையில் வேலை செய்ய, டீம் ஸ்பிரிட்டை உண்டாக்க உதவுமே. அந்த முறையை மத்திய சர்க்காருக்குச் சிபாரிசு செய்ய அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : 1961-ல் இந்த விருது பெற்றவர்கள் :

(1) ஸ்ரீ எம். அருணாசலம், ஹெட்மாஸ்டர், திருமங்கலம் ;

(2) ஸ்ரீ ஏ. ஷென்பகநாதன், ஹெட்மாஸ்டர், முனிசிபல் ப்ரைமரி ஸ்கூல், ஆனந்தகிரி, கொடைக்கானல் ;

(3) ஸ்ரீ ஆர். கந்தசாமி, ஹெட் டீச்சர், வரகநேரி, நார்த் முனிசிபல் ஸ்கூல், திருச்சி ;

(4) ஸ்ரீ ஆர். எம். கணபதி, டீச்சர், குலசேகரபட்டணம்.

இதிலே தனிப்பட்டவர்களுக்கும் மரியாதை செய்வது அவசியம். அது மத்திய சர்க்காரால் செய்யப்படுகிறது. அங்கத்தினர் சொல்லும் திட்டத்தை வேறுவிதமாகப் பரிசீலனை செய்ய வேண்டும். இது மத்திய சர்க்கார் ஏற்படுத்தியிருக்கும் திட்டம்.

[16th March 1961

SRI M. P. SARATHI : இந்த விருதுகள் ராஷ்டிரபதியால் அளிக்கப்படுவது மற்ற விருதுகள்போல் நம் சர்க்காரின் சிபாரிசின் பேரிலா அல்லது அவர்களே ஒரு சிறந்த முறையை ஏற்படுத்தியிருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI A. VEDARATHNAM : இந்தப் பரிசை மத்திய சர்க்கார் அளித்தாலும், மாகாண அரசாங்கத்திற்கு அது சரி என்று தோன்றினால் அதை சிபாரிசு செய்ய முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது தமிழ்நாடு அரசாங்கத்திலும்கூட ரொம்பவும் நன்றாக வேலைசெய்துள்ள மூன்று பேருக்கு பரிசுகள் கொடுக்கப்படுகின்றன ; எலிமெண்டரி ஸ்கூல்களில் கம்மி; ஒவ்வொரு கல்வி ஜில்லாவிலும் இரண்டு ஆசிரியர்கள் விதம் பொருக்கி எடுத்து பரிசுகள் ஏற்படுத்தி, இந்த மாதம் 24-ம் தேதி அப்படி 46 ஆசிரியர்களுக்கு கொடுக்கப்படும். பள்ளிகூடத்தைப்பற்றி தனியாகத்தான் பரிசீலனை செய்ய வேண்டும்.

SRI K. VINAYAKAM : May I know whether it is necessary for individual teachers to make applications for the award of prize or would it be better for Government to institute a committee for selecting these teachers? Is the modus operandi that is adopted by the Committee a fool-proof system which is above suspicion and which enables the selection of the best available teacher in our State?

THE HON. SRI C. SUBRAMANIAM : The procedure is laid down by the Union Government. That procedure is being followed. We have got the best committees possible. We hope the best person would be selected. The State Committee consists of the D.P.I., Dr. A. Lakshmanaswami Mudaliar and the Principal of a Training College.

MR. SPEAKER : I may also make a suggestion that during question-time, questions alone should be asked and suggestions for improvement cannot be made. I followed the question put by Sri K. Vinayakam. The earlier part of the question was a suggestion to Government. It is out of order. I would like hon. Members to put questions only during question-hour and not make suggestions.

SRI K. VINAYAKAM : Referring to the earlier part of my question . . .

MR. SPEAKER : Which is out of order.

SRI K. VINAYAKAM : Is it necessary for individual teachers to make applications?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is the procedure laid down by the Government of India.